உ

சிவமயம்

# ஒன்பது திருக்கோயில்கள் ஓர் ஆதீனம்

'எழுத்துச் செம்மல்'

குன்றக்குடி பெரியபெருமாள்



கோவிலூர் மடாலயம்,
கோவிலூர்
(வழி) மானகிரி - 630 307
(காரைக்குடி அருகில்)

முதல் பதிப்பு : ஏப்ரல் 1998

## கோவிலூர் சுவாமிகளின் ஆசியுரை

ஐந்து நாயன்மார்கள் வழிவந்தவர்கள் நகரத்தார்கள். நகரத்தார் பண்பாடு மூவாயிரம் ஆண்டுகளாக இருந்து வருகிறது. நகரத்தார்கள் ஒழுக்கமுள்ளவர்கள்; தெய்வ வழிபாடுமிக்கவர்கள். மன்னர்களுக்குப் பிறகு தர்ம சிந்தனையோடு திருப்பணிகளைச் செய்து வருபவர்கள் நகரத்தார்கள். திருக்கோவில்களை நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் மட்டும் தான் சிறப்பாகப் பராமரிக்க முடியும்.

கோவிலூர், துலாவூர், பாதரக்குடி ஆதீனங்கள் அருகருகே உள்ளன. இவற்றை நல்ல முறையில் நடத்திக் கொண்டு போக வேண்டும். நகரத்தார்கள் தர்மம் செய்த மரபுடையவர்கள். இதனை இளைஞர்கள் மறந்துவிடக் கூடாது. பட்டினத்தார், காரைக்காலம்மையார், நாயன்மார்கள் முக்தி பெற்ற இடங்களில், ஆண்டு தோறும் குருபூஜைகளை நடத்தி வரவேண்டும். எல்லோரும் ஒன்று சேர்ந்து பெரிய அறக்கட்டளை நிறுவி இதனைத் தொடர்ந்து நடத்தி வந்தால் பின் சந்ததியினருக்கு இது பெரிய சொத்தாக அமையும். அரசு உதவியை எதிர் நோக்காமல் நாம் நம் சொந்த முயற்சியில் இதனைப் பெரிய அளவில் கொண்டு வரவேண்டும். நம்மால் சாதிக்க முடியாதது எதுவுமில்லை.

*கோவிலூர் ஆதீனம்*
*ஸ்ரீலஸ்ரீ நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள்*




# நகரத்தார் நவ திருக்கோயில்கள்

## குன்றக்குடி பெரியபெருமாள்

எழுபது ஆண்டுகளுக்கு முன், 1922 இல் காஞ்சிப் பெரியவர்கள் ஜகத்குரு சங்கராச்சாரிய சுவாமிகள் செட்டிநாட்டுப் பகுதிக்கு வருகை புரிந்தார்கள்.

கானாடு காத்தான் என்னும் சிற்றூரில் சுவாமிகளை மக்கள் மிகச் சிறப்பாக வரவேற்றனர்.

வரவேற்புக்கு வாழ்த்துக் கூறுகிற வேளையில், சுவாமிகள் நகரத்தார் சமூகம் பற்றித் தமது கணிப்பையும், கருத்தையும் வெளியிட்டு மகிழ்ந்தார்கள்:

"சைவமும் தமிழும் தழைத்தோங்கத் தமிழ்நாட்டில் ஒரு சமூகம் உழைத்து வருவதைக் குறிப்பிட வேண்டுமானால், அந்தச் சமூகம்– தனவணிக நகரத்தார் சமூகமென்றே கூறலாம். ஒரு தேசத்துக்குக் கோட்டைக் காப்பு வீரர்கள் இருப்பது போல, இந்து மதம் என்னும் கோட்டைக்குத் தன வணிக நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் கோட்டைக் காப்பு வீரர்களாக இருந்து வருகின்றார்கள்."

காரைக்குடியில் நகரத்தார் சமூக இளைஞர் சிலர், 'இந்து மதாபிமான சங்கம்' என்றோர் அமைப்பை உருவாக்கித் தமிழ் மொழியும், சைவநெறியும் செழுமை பெறத் திட்டமிட்டுத் தொண்டாற்றி வந்தனர்.

சங்கத்திற்கு வருகை புரிந்த மகாகவி பாரதி, அதன் ஆக்கத்தையும் ஊக்கத்தையும் நோக்கத்தையும் அறிந்து, நெகிழ்ந்தும், மகிழ்ந்தும் பாராட்டிப் பாடத் தொடங்கிவிட்டார்!

"ஆகா! கோடி மேன்மை நிலவுற, தனவணிகர் குலத்துதித்த இளைஞர்பலர் கொள்கை கொண்டார்!" என நெகிழ்ந்தார்.

"குலமுயர நகருயர நாடுயர உழைக்கின்றார்!" என மகிழ்ந்தார்.

"வண்மையே குலதர்மம் எனக் கொண்டார்; தொண்டொன்றே வழியாகக் கண்டார் ஒண்மையுயர் கடவுளிடத்து அன்புடையார்!" என்றெல்லாம் நகரத்தார் சமூகத்தை மகாகவி பாரதி பாராட்டிச் சீராட்டிப் பாடல் ஒன்றை வழங்கினார்.

ஓர் அருளாளரின் திருவாக்கால் பாராட்டப்பெற்ற, ஓர் அருட்கவியின் திருப்பாட்டால் போற்றப்பெற்ற நகரத்தார் சமூகம், தமிழ்நாட்டின் மக்கள் தொகையில் மிகச்சிறியது! ஆனால், அது ஆற்றியிருக்கும் அறப்பணிகளின் வகையால் பெரியது! பெரும் புகழுக்கு உரியது!

தமிழகத்திலுள்ள திருத்தலங்கள் பலவற்றிற்குத் திருப்பணிகள் செய்வித்து சத்திரம், பாடசாலை, குளம், நந்தவனம், தண்ணீர்ப்பந்தல் அமைத்து, பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகம் நிறுவிப் பெருங்கீர்த்தி பெற்றுள்ள நகரத்தார் சமூகம், இந்திய நாட்டின் புண்ணியத் திருத்தலங்களில் எல்லாம் தமது அறப்பணிகள் விளங்குமாறும், வணிகம் கருதிக் குடியேறிய அயல் நாடுகளிலெல்லாம் தமது திருப்பணிகள் ஒளிருமாறும் ஆற்றியுள்ள அரிய அறச்செயல்கள் வியந்து போற்றத்தக்கவை; நயந்து பாராட்டத்தக்கவை!

வரலாற்றில் 'தனவணிகர்' என்றும் 'மகுட தன வைசியர்' என்றும், 'நாட்டுக் கோட்டை நகரத்தார்' என்றும், இயக்கமும் செயலும் கருதிக் குறிப்பிடப் பெறுகின்ற தமிழ்நாட்டின் பழைமையான இந்தச் சமூகத்தார் அண்மைக்காலமாக, 'நகரத்தார்', 'செட்டியார்' என அழைக்கப் பெற்று வருகின்றார்கள்.

பன்னூறு ஆண்டுகளுக்கு முன்பாக நாட்டில் வாழ்ந்து வந்த தனவணிகர் தொண்டை நாடு புகுந்து, காஞ்சிப் பெருநகரில் குடியேறினர்.

முறை செய்து காப்பாற்றும் காஞ்சி மன்னனின் குறையும், கொடுங்கோன்மையும், தனவணிகப் பெருமக்களைப் பெரிதும் பாதிக்கத் தொடங்கியபோது, தொண்டை நாட்டிலிருந்து சோழ நாட்டிற்குத் தனவணிகர் குடிபெயர்ந்தனர்.

தாழ்விலாச் செல்வரான தனவணிகர் தம் நாட்டிற்கு வருகை புரிந்ததை உவந்து வரவேற்ற சோழ மன்னன், அவர்களுக்கு உயர்வாழ்வு அளிக்கத் தமது தலைநகரான காவிரிப்பூம்பட்டினத்தின் ராஜ வீதிகளிலேயே மாளிகைகள் அளித்து மகிழ்ந்தான்.

மாளிகைகளில் தங்கக் கலசம் வைத்துக் கொள்ளவும், ஊர்திகளில் சிங்கக் கொடி பறக்க விடவுமான மரியாதைகள் வழங்கியதோடு, சோழ மன்னர்களுக்கு மகுடம் சூட்டும் மாபெரும் புனிதப் பொறுப்பையும் அளித்தான்.

காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்த தனவணிகரின் நேர்மையான வணிக நியதியும், கூர்மையான அறிவுத் திறனும், ஈட்டிய பெருஞ்செல்வமும், இனிய குணப் பண்பும் பாண்டிய மன்னனின் கவனத்திற்கு எட்டின.

சோழ மன்னனிடம் நேராகச் சென்று, தனவணிகர் சிலரைப் பாண்டிய நாட்டிற்கு அனுப்பி வைக்குமாறு வேண்டினான்.

இரு மன்னர்களுக்கும் ஏற்பட்டிருந்த நட்புறவால், தனவணிகர் சிலரைப் பாண்டிய நாட்டிற்கு அனுப்ப இசைவு தெரிவித்தான் சோழ மன்னன். எனினும், பாண்டிய மன்னனிடம், தங்கள் உடைமைக்கும் உரிமைக்கும் தக்க உறுதிமொழி பெற்றுக் கொண்ட தனவணிகப் பெருமக்கள் பூம்புகார்ப்பட்டினத்தில் இருந்து பாண்டிய நாட்டுக்கு அனைவருமே புறப்பட்டுவிட்டனர்!

காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்து நகரத்தார்களைப் பாண்டிய நாட்டுக்கு அழைத்து வந்த பாண்டிய மன்னனது பெயர், 'சவுந்திர பாண்டியன்' என நகரத்தார் சரித்திரம் கூறுகின்றது.

வரலாற்றுப் பதிவின் மூலம் பாண்டிய மன்னன் அரிகேசரி மாறவர்மனாக இருக்கலாமென அறிஞர்கள் கருதுகின்றனர்.

வேள்விக்குடிச் செப்பேடுகளிலும், சின்னமனூர்ச் செப்பேடுகளிலும் புகழ்ந்து பேசப் பெற்றுள்ள மாறவர்மன், 'வளவர்கோன் பாவை' மங்கையர்க்கரசியாரை வாழ்க்கைத் துணையாகப் பெற்றவன்.

இவனது காலம் கி.பி. 670-710 எனக் கொள்ளப்பெற்றுள்ளது.

ஏழு அல்லது எட்டாம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டுக்கு வருகைபுரிந்த நகரத்தார் பெருமக்கள், மன்னன் மனமுவந்து அளித்த பாண்டிய நாட்டின் ஒரு பகுதியில் குடியேறி வாழ்ந்து வந்தனர்.

கடலுக்கு மேற்கே, வைகை ஆற்றுக்கு வடக்கே, பறம்பு மலைக்குக் கிழக்கே, வெள்ளாற்றுக்குத் தெற்கே – இந்த நான்கு எல்லைக்குட்பட்ட பகுதியில் நகரத்தாரின் 'ஏழு வழியார்' அமைதியாக வாழ்ந்து வந்தனர்.

அவர்களின் வழிபாட்டுணர்வின் மேன்மையறிந்த மன்னன், அப்பகுதியில் உள்ள இளையாற்றங்குடிக் கோயிலை நகரத்தாருக்கு உவந்து உரிமை நல்கி, விட்டுக்கொடுத்தான்.

'ஏழு வழியார்' நாளடைவில் ஒன்பது வகையினராகப் பிரிந்தனர். கோயிலை மையமாகக் கொண்டு தங்கள் தனி வாழ்க்கை, சமூக வாழ்க்கை ஆகிய இரண்டையும் அமைத்துக் கொண்டிருந்த நகரத்தார்களின் ஒன்பது பிரிவினரும், தனித்தனிக் கோயில்களைப் பாண்டிய மன்னனிடம் வேண்டிப் பெற்றனர்.

ஏற்கெனவே மன்னனால் விட்டுக்கொடுக்கப்பெற்ற இளையாற்றங்குடியைத் தவிர, மாற்றூர், வைரவன்பட்டி, இரணியூர், பிள்ளையார்பட்டி, நேமம், இலுப்பைக்குடி, சூரைக்குடி, வேலங்குடி ஆகிய எட்டுத் திருக்கோயில்கள் பாண்டிய மன்னனால் நகரத்தார்களுக்கு வழங்கப்பெற்றன.

இரணியூர், பிள்ளையார்பட்டி ஆகிய இரண்டு கோயில்கள் நகரத்தார்களுக்கு 13ஆம் நூற்றாண்டில்தான் வழங்கப்பெற்றனவாக ஒரு செய்தி உண்டு.

இவை அனைத்துமே நகரத்தார் வாழ்ந்து வந்த பகுதிக்குள், பாண்டிய மன்னர்களால் பரிபாலிக்கப்பெற்று வந்த பழைமையான திருக்கோயில்களாகும்.

இத்திருக்கோயில்கள் அமைந்துள்ள பகுதியே 'செட்டிநாடு' என அழைக்கப்பெறுகின்றது.

கிழக்கு மேற்கில் 40 கி.மீ. நீளமும், தெற்கு வடக்கில் 40 கி. மீ. அகலமும் உள்ள ஒரு சதுரமான நிலப்பரப்பில் செட்டிநாடு அமைந்துள்ளது.

ஒரு காலத்தில் 96 ஊர்களில் வாழ்ந்திருந்த நகரத்தார், இப்போது ஏறத்தாழ 78 ஊர்களைத் தங்கள் வாழ்வுத் தலங்களாகப் பெற்றுள்ளனர்.

காரைக்குடி, தேவகோட்டை, இரண்டுமே நகரங்கள். மற்றவை சிற்றூர்கள்.

அந்தச் சிற்றூர்கள் பெற்றிருக்கும் மாடமாளிகைகள், நகரத்தார் பெருமக்களின் செல்வச் செழுமையை மட்டுமல்லாது, கலை ஆர்வச் சிறப்பைக் காட்டி நிற்கும் 'கலங்கரை விளக்கங்க'ளாகக் காட்சி தருகின்றன!

பத்தொன்பதாம் நூற்றாண்டின் உதய காலத்திலிருந்து எழுப்பப்பெற்ற செட்டி நாட்டு நகரத்தார் இல்லங்கள், கண்டு அதிசயிக்கத்தக்கவை! பார்த்துப் பிரமிக்கத்தக்கவை!

பாண்டியர், சோழர், பல்லவர், நாயக்கர் கட்டடக் கலைப்பணிகளைப் போலவே நகரத்தார் கட்டடக் கலைப்பாணியின் தனித்தன்மையைச் செட்டிநாட்டு நகரத்தார் இல்லங்களில் இன்றும் காணலாம்.

'நகர்' எனும் சொல்லுக்குக் 'கோயில்' 'அரண்மனை' எனப் பொருள் உண்டல்லவா?

அரண்மனை போன்று தங்கள் இல்லங்களை அமைத்துக் கொண்டமையாலும் கோயில் தழுவிய குடிகளாக வாழ்ந்து வந்ததாலும் தனவணிகர் 'நகரத்தார்' என அழைக்கப் பெற்றதாகக் கூறப்பெறுகிறது!

நகரத்தார் சைவ சமயப் பற்றைத் தாம் வாழ்ந்திருந்த பூர்விக நாடான நாக நாட்டிலிருந்தே பெற்று வந்துள்ளனர்.

இடையே காஞ்சிபுரத்தில் சில காலம் சமண சமயத்தில் சிலர் பற்றுக் கொண்டு வாழ்ந்து வந்தாலும், பூம்புகார் வந்தவுடன் அனைவரும் சைவ

சமயத்தில் ஆழ்ந்த பற்றும், அகலாத விருப்பமும் கொண்டு, சமய தீட்சையினை முறையாகச் சிவாச்சாரியார்களிடம் பெற்று, உருத்திராட்ச மணியை அணியும் வழக்கத்தை மேற்கொண்டு வந்துள்ளனர்.

தமிழகத்தில் மதமாற்றம் ஊடுருவாத ஒரே சமூகம் நகரத்தார் சமூகமெனக் கூறலாம்.

தமிழ்நாட்டுப் பழங்குடியினரான நகரத்தார், குலத்தில் குன்றாக் கொழுங்குடிச் செல்வராய்ச் சிவநெறியையும், செந்தமிழையும் இரு கண் களாகக் கொண்டு போற்றிப் பாதுகாத்துப் புகழ்கைக் கொண்டவராவர்.

இயற்பகை நாயனார், அமர்நீதி நாயனார், மூர்த்தி நாயனார், காரைக்கால் அம்மையார், கலிக்கம்ப நாயனார், பட்டினத்து அடிகள் போன்ற தெய்வத் திருத்தொண்டர்களைப் பிறப்பித்து நகரத்தார் சமூகம் பெருமை பெற்றுள்ளது.

உய்யும் நெறியுணர்ந்து, மெய்யறம் பேணி மேன்மை பெற்ற நகரத்தார், பாண்டிய மன்னனிடம் வேண்டிப் பெற்ற நவதிருக்கோயில்களைச் சிவம் விளங்கச் சிற்பக் கலையின் சிகரங்களாகத் திகழ வைத்துள்ள அற்புதங்கள் படிக்கத்தக்கவை மட்டுமல்ல; நேராகப் பார்த்து, நெஞ்சம் மகிழத்தக்கவை!

பெருமிதத்தால் நெஞ்சை நிமிர்த்தத் தக்கவை!

நகரத்தார் வாழ்ந்து வந்த தலங்களிலெல்லாம் வழிபாட்டிற்கெனத் திருக்கோயில்களை அமைத்துக் கொண்டிருப்பினும், நகரத்தார்களின் குல மரபுத் திருக்கோயில்களாய், திருப்பதிகளாய் விளங்கும் இளையாற்றங்குடி, இலுப்பைக்குடி, இரணியூர், சூரைக்குடி, நேமம், வேலங்குடி, மாற்றூர், வைரவன் கோயில், பிள்ளையார்பட்டி ஆகிய நவ திருப்பதிகளில் நிகழ்ந்துள்ள திருப்பணிகள் அரியவை! பெரும் புகழுக்கு உரியவை!

காரைக்குடியிலிருந்து நகரப் பேருந்துகள் மூலம் நவ திருக்கோயில்களுக்கும் சென்று, தரிசித்துத் திரும்பலாம்.

இந்தக் கோயில்கள் அனைத்தும் காரைக்குடியிலிருந்து 25 கி.மீ. தொலைவுக்குள்தான் உள்ளன.

காரைக்குடியிலிருந்து வடமேற்கே 13 கி. மீட்டரில் நேமம், 25 கி.மீ. இளையாற்றங்குடி, வடக்கே 8 கி.மீ. சூரைக்குடி, வடகிழக்கே 5 கி.மீ. வேலங்குடி, தென் கிழக்கே 5 கி.மீ இலுப்பைக்குடி, 7 கி.மீ. மாற்றூர், மேற்கே 15 கி.மீ. பிள்ளையார் பட்டி, 16 கி.மீ. வைரவன்பட்டி, வடமேற்கில் 25 கி.மீ. இரணியூர்.

காரில் பயணித்தால் ஒரே நாளில் ஒன்பது திருப்பதிகளையும் தரிசித்துவிடலாம்!

சிந்தையை அள்ளும் சிற்ப அற்புதங்கள், நம்மை அங்கங்கே தங்கச்செய்து, பயணத்தில் தாமதத்தை ஏற்படுத்திவிடவும் செய்யலாம்!

அந்தணர்கள், ரிஷிகளை அடிப்படையாகக் கொண்டு, தங்கள் குல கோத்திரங்களை அழைத்துக் கொள்கிறார்களல்லவா?

அது போல, நகரத்தார் ஒன்பது கோயில்களையும் ஆதாரமாகக் கொண்டு, தங்கள் குல கோத்திரத்தை நிர்ணயித்துக் கொண்டுள்ளனர்.

ஒரே கோயிலைச் சேர்ந்தோர் அனைவரும் 'தாயாதிகள்' 'பங்காளிகள்' எனக் கருதப்பெற்று வருகின்றனர்.

ஒரே கோயிலைச் சேர்ந்தோர் தமக்குள் 'கொள்வினை', 'கொடுப்பினை' வைத்துக் கொள்வதில்லை.

நகரத்தார் நவ திருக்கோயில்களின் அமைப்பு முறை, ஒருசில வேறுபாடுகளைத் தவிர, அனைத்தும் ஒரே மாதிரியான 'பொதுமை'யுள் அடங்கி உள்ளன.

குடைவரைக் கோயிலான பிள்ளையார்பட்டித் திருக்கோயில்கூடப் பிற்சேர்க்கையான மருதீஸ்வரர் கோயில் அமைப்பால், பொதுமையின் வரிசைக்கு அணி செய்கிறது!

ஒன்பது திருக்கோயில்களிலும் கருவறையுள் விளங்கும் சிவலிங்கம் கிழக்கு நோக்கி உள்ளது.

அனைத்துத் திருக்கோயில்களும் கிழக்குத் திசையை நோக்கியே அமைக்கப்பெற்றுள்ளன.

கருவறையை அடுத்து அர்த்த மண்டபம், அர்த்த மண்டபத்திற்கும் கொடி மரத்திற்கும் இடையே மகா மண்டபம்.

அர்த்த மண்டபத்தில் நந்தி, பலிபீடம் சிறிய அளவில் அமைக்கப்பெற்று, மகா மண்டபத்தின் கீழ்ப்பகுதியில் நந்தியும், பலிபீடமும் கொடி மரத்திற்கு முன், பெரிய அளவில் அமைக்கப் பெற்றுள்ளன.

அர்த்த மண்டப நுழைவாயிலில் துவாரபாலகர்கள் காவல் பொறுப்பில் நின்று கொண்டுள்ளனர்.

அர்த்த மண்டபத்தின் வடக்கில் அம்பாளுக்கெனத் தனிச் சிற்றாலயம் அமைக்கப்பெற்றுள்ளது.

இதன் வாயிலில் துவார சக்திகள் இருபக்கமும் காவற்பொறுப்பில் நிற்கின்றனர்.

அம்பாள் சிற்றாலயத்தை ஒட்டி, பள்ளியறை, வயிரவர் தனிச் சந்நிதிச் சிற்றாலயம் காணப்பெறுகின்றன.

அம்பாள், வயிரவர் சிற்றாலயங்கள் கருவறைகளுடன் அர்த்த மண்டப அமைப்பையும் பெற்றுள்ளன.

பள்ளியறையில் கண்ணாடிகொண்டு செய்திருக்கும் வேலைப்பாடுகள் கண்களைக் கவர்கின்றன.

வெள்ளி ஊஞ்சலில் அம்பாள் அமர்ந்த திருக்கோலத்தில் வீற்றிருக்கக் காண்கிறோம்.

அர்த்தசாம வழிபாட்டிற்குப் பின் கருவறையிலிருந்து பெருமானின் அமர்ந்த திருக்கோலச் செப்புத் திருமேனி பள்ளியறைக்கு நாள்தோறும் எழுந்தருள் செய்கிறது.

ஊஞ்சலில் அம்பாளின் அருகே கொண்டுவந்து வைக்கப்பெற்று வழிபாட்டிற்குப் பின் திருக்காப்புச் செய்யப்பெறுகின்றது.

பள்ளியறை வழிபாடு, ஒன்பது திருக்கோயில்களிலும் நாளின் நிறைவு வழிபாடாக நிகழ்த்தப்பெறுகிறது.

கருவறையைச் சுற்றிலும் வெளிப்புறத்தில் ஐந்து தேவகோட்டங்கள் அமைக்கப்பெற்றுள்ளன.

கிழக்குப் பார்த்த கருவறை அல்லவா?

அதன் தெற்கில் நர்த்தன விநாயகரையும், தட்சிணாமூர்த்தியையும் எழுந்தருளச் செய்துள்ளனர்.

மேற்கில் அடிமுடி காட்டா நாதர் சிலையும், வடக்கில் பிரம்மா, துர்க்கை சிற்பங்களும் இடம் பெற்றுள்ளன.

முதல் திருச்சுற்றில் அனைத்துத் திருக்கோயில்களிலும் நான்கு சிற்றாலயங்கள் அமைக்கப்பெற்றுள்ளன.

அவை கிழக்கு நோக்கியே உள்ளன.

விநாயகர், சோமாஸ்கந்தர், வள்ளி தெய்வானை உடனாய ஆறுமுகப் பெருமான், கஜலட்சுமி ஆகியோர் சிற்றாலயங்களில் எழுந்தருளி உள்ளனர்.

திருச்சுற்றின் தெற்கே பொல்லாப் பிள்ளையார் எழுந்தருள, அறுபத்துமூன்று நாயன்மார் சிற்பங்கள் அமைக்கப் பெற்றுள்ளன.

வடகிழக்கில் நவகிரகங்கள் எழுந்தருளி உள்ளன.

வடக்கில் சண்டேஸ்வரர் சிற்றாலயம் உள்ளது.

கிழக்கில் திருவாயிலின் உட்பகுதியில் சூரியன், சந்திரன் சிற்பங்கள் அமைக்கப் பெற்றுள்ளன.

சந்திரனுக்கு அருகே சனீஸ்வரன் காட்சி தருகிறார்.

மிகச்சிறிய மாற்றங்களைத் தவிர, நகரத்தார் நவ திருக்கோயில்கள் அனைத்திலும் இத்தகைய திருப்பணி அமைப்பு முறையே பின்பற்றப் பெற்றுள்ளன.

இளையாற்றங்குடிக்கு நாம் சென்ற போது காணுமிடமெல்லாம் அழகிய ஊருணிகளும், அவைகளின் மேற்குக் கரைகளிலெல்லாம் ஒரு சிற்றாலயமும் அமைக்கப்பெற்றுள்ள அதிசயக் காட்சி, நம்மைப் பிரமிக்க வைத்தது!

எத்தனை ஊருணிகள்! ஒன்று ... இரண்டு என எண்ணிக் கொண்டே வந்த போது, ஏழு ஊருணிகள் நம் எண்ணிக்கையுள் வந்தன!

பாண்டிய மன்னன் இளையாற்றங்குடிக் கோயிலை அளித்தபோது, நகரத்தார் ஏழு வழியினராக வாழ்ந்து வந்தார்களல்லவா? அந்த ஏழு பிரிவினரும் விநாயகர் சிற்றாலயங்களையும் விசாலமான ஊருணிகளையும் இளையாற்றங்குடியில் அமைத்துள்ளனர்.

பூங்கொன்றை வேலங்குடி கல்வெட்டில் நாகநாட்டில் நகரத்தார் வாழ்ந்தபோதே மரகத விநாயகரைத் தங்கள் வழிபடு கடவுளாகக் கொண்டிருந்தனரென்ற செய்தி வெளிப்படுகிறது.

எனவே, பண்டைக் காலம் முதலாகவே விநாயகர் வழிபாட்டில் நகரத்தார் உள்ளார்ந்த ஈடுபாடு காட்டி வந்துள்ளனர் எனத் தெரிகிறது.

இன்றைக்கும் எழுதத் தொடங்கும் போது நகரத்தார் பெருமக்கள் 'உ' எனப் பிள்ளையார் சுழி, பிரணவக் கடவுளை எழுதும் வழக்கத்தைக் கொண்டுள்ளனர்.

செட்டிநாட்டில் பிள்ளையார் கோயில் இல்லாத ஓர் ஊரைக் காண முடியாது.

எனவேதான், பாண்டிய நாட்டில் தங்கள் குலத்திற்கென மன்னனால் வழங்கப்பெற்ற இளையாற்றங்குடித் திருத்தலத்தில் ஏழு வழியினரும் ஏழு ஊருணிகள், ஏழு பிள்ளையார் கோயில்களை அமைத்து வழிபட்டுள்ளனர் எனக் கருதத் தோன்றுகிறது.

பிள்ளையார்பட்டியில் குடைவரைப் பிள்ளையாராக எழுந்தருளியுள்ள தேசிக விநாயகப் பெருமானைத் தவிர, மற்ற எட்டுத் திருக்கோயில்களிலும் விநாயகர் சிற்பம் ஒரே அமைப்பில் உருவாக்கம் பெற்றுள்ளன.

விநாயகர் முக்கண்களோடும், ஐந்து கரங்களோடும், தும்பிக்கையை இடமாக வளைத்து, அதில் மோதகம் கொண்டும், மகுடம் தரித்து வீற்றிருக்கிறார்.

இரண்டே கரங்கள் பெற்று, தும்பிக்கையை வலமாக வளைத்து, 1.83

மீட்டர் உயரத்தில் பிரம்மாண்டமான தோற்றப் பொலிவுடன் தோன்றும் பிள்ளையார்பட்டித் தேசிக விநாயகப் பெருமான், குடைவரைக்குள் எழுந்தருளியுள்ள புடைச் சிற்பமூர்த்தி!

இருதிருக்கரங்கள் பெற்ற விநாயகர் சிற்பம் இது ஒன்றேயென ஆய்வாளர் கருதினும், இது போன்றதொரு சிற்பம் 75 செ.மீ. உயரத்தில் குன்றக்குடி குடைவரைக் கோயிலில் காணப்பெறுகின்றது!

இவை போன்ற விநாயகர் சிற்பங்கள் வேறெங்கும் காணக் கிடைக்கவில்லையெனத் தொல்பொருள் ஆய்வறிஞர் இரா. நாகசாமி தம்மிடம் தெரிவித்ததாக டாக்டர் வ. தேனப்பன் குறிப்பிட்டுள்ளார்.

பிள்ளையார்பட்டி விநாயகர் சிற்பந்தான் தமிழ்நாட்டின் முதற் பிள்ளையாரென்றும், 1400 ஆண்டுகளுக்கு முன் இது அமைக்கப் பெற்றிருக்கலாம் என்றும் அறிஞர் சா. கணேசன் உறுதிப்படுத்தி உள்ளார்.

சிற்பங்களைக் கல்லிலும், உலோகத்திலும், மரத்திலும், சுதையிலும் அமைத்துக் கவின் கருத்தையும், கலைச்சிறப்பையும் வெளிப்படுத்தும் அருமை, தமிழகத்துக் கலை வல்லுநர்களின் தனிப்பெருமை.

அந்தத் தனிப் பெருமையின் மகோன்னதங்கள் அணிவகுத்து நிற்குமாறு ஒன்பது திருக்கோயில்களையும், கல் திருப்பணியாக உருவாக்கி அர்ப்பணித்துள்ளனர், நகரத்தார் பெருமக்கள்.

வயிரவர் வழிபாட்டில் நகரத்தார் மிகுந்த ஈடுபாடு கொண்டுள்ளதை ஒன்பது கோயில்களிலும் காணமுடிகிறது.

கோயிலின் மூல மூர்த்திக்கும், மூலநாயகிக்கும் அடுத்த சிறப்பை எல்லாத் திருக்கோயில்களிலும் வயிரவரே பெற்றுள்ளார்.

சிவபெருமானின் மற்றுமொரு வடிவந்தானே வயிரவர்?

பாதங்களில் சிலம்பும், மார்பில் தலை மாலையும் அணிந்து, முக்கண்களோடு ஆயுதங்கள் பெற்ற நான்கு திருக்கரங்களோடு நின்ற திருக்கோலத்துடன் விளங்கும் வயிரவரின் நாய் வாகனம், அவருக்குப் பின்னே நின்றுகொண்டிருக்கிறது.

இத்தகைய சிற்ப வடிவம் ஒன்பது திருக்கோயில்களிலும் ஒரே சீராகக் காணப்படினும், இலுப்பைக்குடி திருக்கோயிலில் மட்டும் இரண்டு நாய்களின் வடிவங்களை வயிரவருடன் பார்க்க முடிகிறது. 'வயிரவர்' 'பைரவர்' என்றும் அழைக்கப்படுகிறார்.

வீரத் திருமேனி கொண்ட வயிரவர் வழிபாட்டில் ஈடுபாடு கொண்டுள்ள நகரத்தார், ஞானத்திருமேனி கொண்ட தட்சணாமூர்த்தியிடம் மிகுந்த பற்றும் நிறைந்த பக்தியும் கொண்டுள்ளதை ஒன்பது கோயில்களிலும் தட்சணாமூர்த்திக்கு எடுப்பித்துள்ள சிற்றாலய அமைப்பே தெளிவு படுத்திவிடுகிறது!

தட்சணாமூர்த்திக்குத் தனி மண்டபம் அமைத்து, மிக மிக நுணுக்கமும், திறமும் கொண்ட சிற்பக் கலையின் ஒளி வீச்சு நவ திருப்பதிகளிலும் நயத்தோடும் பயத்தோடும் பேணப்பட்டுள்ளது.

ஒவ்வொரு திருக்கோயிலையும் திட்டமிட்டுக் கல் திருப்பணியாக அமைத்து, சுதை, மரம், உலோகம், கல் ஆகிய நான்கு வகையினிலும் சிற்பங்களைத் தேர்ந்த சிற்பிகளைக் கொண்டு உருவாக்கி, அப்பப்பா... கலைத்தாயின் திருக்காட்சியை அற்புதக் காவியமாய் ஒளிரச் செய்துள்ளனர்!

ஆய கலைகளின் அரிய திருப்பணியை, தூய பக்தியின் தொழத்தக்க தெய்வத் தொண்டை, பார்த்துப் பார்த்துப் பரவசம் கொள்கிறோம்.

பகுத்து நிற்கும் கலைக் கனிகளைக் கண்ணால் பறித்துச் சுவைக்கிறோம்! கருத்தால் நெகிழ்ந்து ரசிக்கிறோம்! மனத்தில் தோன்றும் எண்ணங்கள் வியப்பின் உச்சியில் மகிழ்ந்து நீந்துவதையும் உணர்கிறோம்!

இளையாற்றங்குடியில் 'கைலாசநாதர்' என்றும், இலுப்பைக்குடியில் 'தான்தோன்றி ஈசர்' என்றும்.

மாற்றூரில் 'ஐநூற்றீசுவரர்' என்றும்,

வைரவன்பட்டியில் 'வளரொளிநாதர்' என்றும்,

நேமம் கோயிலில் 'ஜெயங்கொண்ட சோழீசர்' என்றும்,

சூரைக்குடியில் 'தேசியநாதர்' என்றும்,

வேலங்குடியில் 'கண்டீசுவரர்' என்றும்,

இரணியூரில் 'ஆட்கொண்ட நாதர்' என்றும்,

பிள்ளையார்பட்டியில் 'திருவீசர்' என்றும் கருவறை மூல மூர்த்திகள் திருப்பெயர் கொண்டுள்ளனர்.

'நித்ய கல்யாணி', 'சவுந்தர நாயகி', 'பெரிய நாயகி', 'வடிவுடையம்மை', 'சிவகாமவல்லி' எனும் திருநாமங்களைக் கொண்டு அம்பாள் வழிபடப்படுகிறாள்.

'மூலநாதர்' களின் திருப்பெயர்களும், 'மூலநாயகி' களின் திருநாமங்களும் திருக்கோயில்களின் காலப் பழைமையையும், வரலாற்றுச் செய்திகளையும் உணர்த்துவனவாய் அமைந்திருப்பது எண்ணிப் பார்க்கத் தக்கது!

வழிபாட்டிற்கு உரிய சிற்பங்களைத் தவிர்த்து, தனியாக மண்டபத் தூண்களிலும், கருவறைச் சுவர்களிலும் அமைத்திருக்கும் சிற்பங்கள் நவகோயில்களிலும் மிகுந்த கலைச்சிறப்புடன், உயர்ந்த கருத்துகளை வெளிப்படுத்தும் உன்னதக் கவிதைகளாகத் திகழ்கின்றன.

வைரவன்பட்டி, இரணியூர், பிள்ளையார்பட்டி ஆகிய மூன்று திருக்கோயில்களிலும் முன் மண்டபத்தில் திகழும் வேடனும், அவன் மனைவியுமாக அமைக்கப்பெற்றுள்ள சிற்பங்கள், சிற்பக் கலையின் சிகாமணிகளாக விளங்குகின்றன!

புராண, இதிகாசச் சிற்பங்கள் அழகிய, அரிய கருத்து விளக்கங்கள்! கற்சிற்பங்களைத் தவிர, கோபுரங்களிலும் விமானங்களிலுமுள்ள சுதைச் சிற்பங்களின் அழகும், சிற்றாலயங்களில் உள்ள மரச் சிற்பங்களின் வேலைப்பாடுகளும், நீர், நிலம், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய ஐம்பூதங்களின் தத்துவ விளக்கமாகத் திகழும் ஐம்பொன் (செம்பு, வெண்கலம், வெள்ளி, தங்கம், பித்தளை) கலவையில் உருவாக்கியுள்ள உலோகச் சிற்பங்களின் உயிர்ப்புமிகு எழிலும் ஒன்பது கோயில்களிலும் நம் இதயத்தை ஈர்க்கின்றன.

நவ கோயில்களிலும் உள்ள வாகனங்கள், திருத்தேர்கள் நகரத்தார்களின் பக்தியுணர்வைப் பறைசாற்றி நிற்கின்றன!

காற்றோட்டமாக இருக்க வேண்டுமெனக் கருதி, சிற்பிகள் மண்டபங்களில் கற்சாளரங்களை நமது திருக்கோயில்கள் சிலவற்றில் அமைத்துள்ளனர். இத்தகைய கற்சாளரம் பிள்ளையார்பட்டி மருதீசர் அர்த்த மண்டப அமைப்பில் அமைக்கப்பெற்றுள்ளதைக் காணலாம்.

மழைநீர் கோயிலுக்குள் புகுந்து இடிபாடுகளை ஏற்படுத்தி விடக்கூடாதென்ற எண்ணத்தில், கல்லைக் குடைந்து கற்குழாயை உருவாக்கியுள்ள அருமை இரணியூரில் பேணப்பெற்றுள்ளது!

கல்லில் வளையங்களை உருவாக்கி, அவைகளைச் சங்கிலிபோல் தொடர் அமைப்பாகச் செய்து நம்மை வியக்க வைக்கும் வேலைப்பாடுகளை வைரவன்பட்டி, இலுப்பைக்குடி, சூரைக்குடி ஆகிய திருக்கோயில்களில் பார்க்கிறோம்.

கடவுளை நமது முன்னோர் ஓவியமாக எழுதி முதல் முதலில் வழிபட்டதை அறிவோம்.

எனவேதான், நமது சங்க நூல் அகநானூறு ஓவியமாக எழுதப்பெற்ற கடவுளை 'எழுதணி கடவுள்' எனப் போற்றுகிறது.

ஓவியமாக எழுதப்பெற்ற கடவுளர் கால ஓட்டத்தில் வெகு சீக்கிரமே அழிந்துபடும் நிலையறிந்து, சிற்பங்களை உருவாக்கி வழிபடத் தொடங்கினர்.

கோயிலின் கருவறையில் மூலமூர்த்திகளின் சிற்பங்கள் இடம் பெற்றவுடன், வெளிச் சுவர்களிலும் மண்டபங்களிலும் விதானங்களிலும் ஓவியங்கள் இடம் பெற்றன.

ஒன்பது கோயில்களிலும் இடம் பெற்றுள்ள ஓவிய அற்புதங்களை அறிஞர் டாக்டர் வ. தேனப்பன் ஐந்து வகைகளாகப் பகுத்துள்ளார்.

அவை : தலபுராண ஓவியங்கள், பிறபுராண ஓவியங்கள், காப்பிய ஓவியங்கள், இறைவன் திருமேனி ஓவியங்கள், பாலுறவு ஓவியங்கள்.

மதுரையில் உள்ள திருவிளையாடற் புராண ஓவியங்களின் பான்மை, இங்கு தொடரப்பெற்றுள்ளதெனக் குறிப்பிட்டுள்ளார் அறிஞர் மா. சந்திரமூர்த்தி.

இளையாற்றங்குடி, வயிரவன்பட்டி, இலுப்பைக்குடி, இரணியூர் ஆகிய கோயில்களில் அதிகமான ஓவியங்கள் உள்ளன.

பிள்ளையார்பட்டியிலுள்ள ஒரு விநாயகர் ஓவியம், நாம் எங்கு நிற்பினும் நம்மையே நோக்குவதுபோல் விழிகளில் வித்தகம் செய்துள்ள ஓவியனின் திறமை குறிப்பிடத்தக்கது.

திருவிளையாடல் புராணக் காட்சிகள் 'இளையாற்றங்குடி, இலுப்பைக்குடி' கோயில்களில் அதிகமாக வரையப்பெற்றுள்ளன.

பாலுறவுக் காட்சிகளைப் பலபடியாக வைரவன்பட்டிக் கோயிலில் வரிசை வரிசையாக இடம்பெறச் செய்துள்ளனர்.

பேரின்பத்திற்கு மானுட உள்ளத்தை ஆற்றுப்படுத்த வேண்டிய திருக்கோயிலில், சிற்றின்பத்தைத் தூண்டும் ஓவியங்களை ஏன் வரைந்துள்ளரென எண்ணிப் பார்க்கத்தக்கது.

துறவின் மூலமே வீடுபேறு அடைய முடியுமெனச் சமண சமயத்தார் கூறிய கருத்திற்கு எதிர்ப்பாக, இல்லற வாழ்வில் ஈடுபாடு கொண்டே வீடு பேற்றை அடைய முடியுமென்ற கொள்கையை நிலை நாட்டிடவே, இவ்வகையான ஓவியங்களையும், சிற்பங்களையும் திருக்கோயில்களில் இடம் பெற வைத்தனரெனப் பேரறிஞர் ச. தண்டபாணி தேசிகர் குறிப்பிட்டுள்ளது கவனத்தில் கொள்ளத்தக்கது.

ஓவியங்கள் அனைத்தும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் உதய காலத்தைச் சேர்ந்தவை.

ஓவியங்களில் நீலம், சிவப்பு, பச்சை, கறுப்பு, வெள்ளை, மஞ்சள், அரக்கு ஆகிய வண்ணங்கள் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

திருக்கோயில்களைப் பரிபாலனம் செய்யும் பக்குவப்பட்ட நெறிமுறைகள் அறிந்து போற்றத்தக்கவை. நகரத்தார் கட்டடக்

கலைப்பாணி (NAGARATHAR ARCHITECUTRE) எத்தகைய சிறப்புப் பெற்றுள்ளதோ, அதைப் போலவே நகரத்தார் கோயில் நிர்வாக அமைப்பும் (NAGARATHAR KOIL ADMINISTRATION) தனிச் சிறப்பிற்குரியது.

பாண்டிய மன்னர்களால் அளிக்கப்பெற்ற பழமையான திருக்கோயில்களை, நகரத்தார் தங்கள் குல மரபுத் திருப்பதிகளாகக் கொண்டு 18,19 ஆம் நூற்றாண்டுகளில் ஆற்றியிருக்கும் திருப்பணிகளின் மகோன்னதங்களை முழுமையாக எழுத்தில் எழுதிக் காட்ட முடியாது!

நெஞ்சை அள்ளும் அவைகளின் சிறப்புகளை நேராகக் காணும் போதுதான் அவைகளின் உயர்ந்த நிலையும், உன்னதக் கலையும் முழுமையாகத் தெரியவரும்!

*(நன்றி : அமுதசுரபி)*

# நலமளிக்கும் நகரத்தார் ஆதீனம்

குன்றக்குடி பெரியபெருமாள்

உலகம் அறிந்த நிழற்படக் கலைஞர் பன்னிருவருள் ஒருவர்; ஐம்பது ஆண்டுகள் அனுபவம் செறிந்த அச்சுக்கலை வல்லுநர்; நாட்டிய, நாடகங்களுக்கும் சீரிய வகையில் ஒளியூட்டி, சிறந்த புகழ் ஈட்டிய கலாநிபுணர்; ஏறத்தாழ அறுபது ஆண்டுகள் சென்னை கலாசேட்திராவில் தொடர்பும், தோய்ந்த இணைப்பும் கொண்டு, உள்ளார்ந்த உவகையுடன் உலைவின்றித் தொண்டாற்றி உயர் பெருமை பெற்றவர்; எல்லாவற்றிற்கும் மேலாக, கலாசேட்திரா அமைப்பை உருவாக்கி, நாட்டியக் கலையின் நுட்பத்தையும்திட்பத்தையும் நாடு உணர்ந்து மகிழ, நாடுகளெல்லாம் பார்த்துப் போற்ற, அருஞ்சேவை புரிந்து அமரரான அன்னை ருக்மணி அருண்டேலின் அன்பிற்குரிய அருமைச் சீடர்!

ஆம்! கோவிலூர் மடாலய ஆதீனகர்த்தர் தவத்திரு நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகளின் முன்னாள் வாழ்க்கையைக் குறுகத்தறித்த குறிப்புரையாகக் கூறியுள்ளோம்.

செட்டிநாட்டின் கேந்திரமாகிய காரைக்குடி நகரின் மேற்கே, இரண்டு கி.மீ. தொலைவில் அமைந்துள்ள கோவிலூர் ஆதீனம், தமிழகத்தில் தனித்தன்மையும், தனிப் புகழும் பெற்றுள்ள வித்தியாசமான வித்தகத் திருமடம்! வேதாந்த வடமொழி நூல்கள் அனைத்தையும், தமிழ் மொழியில் மாற்றம் செய்து, அனைவரும் – தமிழறிந்த எல்லோரும் – எளிமையாகக் கற்றுத் தெளிய 'கால்கோள்' செய்த திருமடம்! கோவிலூர் திருமடத்தை

உருவாக்கிய ஆதி அருள் முதல்வர் தவத்திரு ஆண்டவர் சுவாமிகள் "ஞான வழியில் ஈடுபாடுகொள்ள, மனப் பக்குவமே தகுதிக்கு உரியது. வேதாந்தத்தைப் பயிலவும், பயின்று பக்தி செய்யவும் குலமோ, சாதியோ, சம்பிரதாயங்களோ தடையாக இருப்பதில்லை" என மொழிந்து, வேதாந்தத்தைப் 'பொதுமை' யாக்கிய புதுமைச் சித்தராவார்!

பத்தொன்பதாம் நூற்றாண்டின் உதய காலத்தில் பண்பாட்டுச் சிறப்பிற்குரிய நகரத்தார் குடியில், காரைக்குடியில் பிறந்த முத்துராமலிங்கம், சிறு வயதில் சிக்கல் திருத்தலத்தில் பெற்றோருடன் வாழ்ந்து வந்தார். சிக்கலுக்கு அருகே பொருள் வைத்த சேரி என்னும் சிற்றூரில் 'உகந்தலிங்க சுவாமிகள்' என அழைக்கப்பெற்ற ஞானச் செல்வரிடம், முத்துராமலிங்கம் முனைந்து தேடிச் சென்று, வேதாந்த நூல்களை முழுமையாகக் கசடறக் கற்றார். இளமையிலேயே மனப் பக்குவம் பெற்று, செந்தண்மை பூண்டொழுகிய முத்துராமலிங்கத்தைப் பார்த்த வடநாட்டு அருளாளர் ஒருவர், 'இவன் உலகத்திற்கு உபதேசிக்க வந்த ஆண்டவன்!" என உவந்துரைத்து மகிழ்ந்தாராம்! அதன் பின்னர் முத்துராமலிங்கம் 'ஆண்டவர்' என அன்பு கெழுமிய மரியாதையுடன் அழைக்கப் பெற்றார்.

ஒருமுறை கோவிலூரில் உள்ள திருக்கோயிலுக்கு வழிபாட்டுக்காகச் சென்ற ஆண்டவர், திருக்கோயில் சிதைந்து கிடந்த அவலநிலையைக் கண்ணுற்றுப் பெரிதும் வருந்தினார். திருக்கோயில் திருப்பணி செய்யத் தீர்மானித்த ஆண்டவருக்கு, நகரத்தார் பெருமக்கள் தாராளமாக நன்கொடை அளித்து உதவினர். நகரத்தார்களைத் திருக்கோயில் திருப்பணியில் ஆர்வமாக ஈடுபடச் செய்த முதல்வரும், நகரத்தார் ஆதீனத் திருமடாலயத்தைக் கோவிலூரில் உருவாக்கிய ஆதி முதல்வரும் அருட்செல்வர் ஆண்டவரே என்பது நினைக்கத்தக்கதும், நெஞ்சார்ந்து போற்றத்தக்கதுமாகும்.

தவத்திரு ஆண்டவர் சுவாமிகளால் தொடங்கி வைக்கப் பெற்ற கோவிலூர் திருநெல்லை அம்பாள் சமேத கொற்றவாளீசுவரர் திருக்கோயில் திருப்பணி, பின்னே வந்த திருமடாலயத் தலைவர்கள் சிலரால், திருக்குளம், மைய மண்டபம், நுழைவாயில் இரதக் கூடங்கள் வளைவுடன் கூடிய இரதமேருகள் முதலான அரிய சிறப்பு அமைப்புகளுடன்,

'கோவிலூர்' என்னும் பெயரின் பொருள் முழுதுறத் திகழ வனப்புடன் நிறைவு செய்யப் பெற்றது. 96 ஊர் நகரத்தார்களின் கூட்டம் நடைபெறுவதற்கேற்ற பிரம்மாண்டமான மண்டபத்தையும், கலைச் சிறப்புடைய திருமடாலயத்தைக் கல்காரமாகவும் எடுப்பித்து, கோவிலூரை தானச் செல்வர்களின் நிறைவிடமாகவும், ஞானச் சாதுக்களின் உறைவிடமாகவும் வளர்த்த அருமை, கோவிலூர் ஆதீனத்தின் தனிப் பெருமை!

கோவிலூர் திருமடாலயத்தின் ஆதீனகர்த்தராக எழுந்தருளியுள்ள தவத்திரு நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள், 'கோவிலூர் ஆண்டவர்' என வழங்கப் பெற்ற தவத்திரு முத்துராமலிங்க ஞான தேசிக சுவாமிகளின் மகன் வழி ஆறாவது தலைமுறையைச் சார்ந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்க சிறப்புச் செய்தி. ஏனெனில் இதுவரை கோவிலூர் மடாதிபதிகளாக எழுந்தருளிய எவரும், ஆதி குரு முதல்வர் ஆண்டவரின் மரபைச் சார்ந்தவர்கள் அல்லர். பன்னிரண்டாவது ஆதீனகர்த்தராகப் பொறுப்பு ஏற்றுள்ள தவத்திரு நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகளுக்கே, அத்தகைய நல்வாய்ப்பு கிட்டியுள்ளது.

அச்சுக் கலையின் நுணுக்கங்களை ஜெர்மன் நாட்டுக்குச் சென்று, திறமிக்கப் பயிற்சி பெற்று, கலாசேட்திராவின் ஓர் அங்கமான 'கலாசேட்திரா அச்சகம்' மற்றும் நூல் வெளியீட்டு நிர்வாகியாக நீண்ட காலம் பணியாற்றிப் பின்னர் அன்னை ருக்மணி அருண்டேலின் ஆசியோடு, அச்சக உரிமையாளராகப் பொறுப்பேற்ற சுவாமிகள், வெளிநாட்டு நூல்களுக்கு இணையாக, சென்னையில் நூல்களைப் பதிப்பித்து, அமெரிக்கா போன்ற மேலை நாடுகளுக்கு அனுப்பி வைத்து தமது அயர்வறியா உழைப்பால், ஆர்வத்தால் பெரும் பொருள் ஈட்டியுள்ளார்கள்! குழந்தைக் கல்வித் துறையில் புகழார்ந்த டாக்டர் மரியா மாண்டிசோரி அம்மையாரின் வழிதடத்தைப் பின்பற்றிப் பாடப் புத்தகங்களை உருவாக்கி அச்சிட்டு வழங்கிய உன்னதப் பணியில், கலாசேட்திரா அச்சகம் காட்டிய அளப்பரிய ஆர்வத்தை அகம் குளிர உரைத்து மகிழும் சுவாமிகள், குழந்தைக் கல்வித் துறையில் மிகுந்த ஈடுபாடு கொண்டவராவார்கள். எனவேதான் சுவாமிகள் ஆதீன கர்த்தராகப் பொறுப்பேற்ற அன்றே, கோவிலூரில் ஒரு சிறுவர் பள்ளி (Nursury School) தொடங்கப் பெற்றது!

காரைக்குடிக்கு அருகேயுள்ள மானகிரியில் தொடக்கக் கல்வி பெற்று, காரைக்குடியில் எஸ்.எம்.எஸ். உயர்நிலைப் பள்ளியில் சில காலம் பயின்று, கலாசேட்திரா உதவியில் பள்ளிப் படிப்பையும், கல்லூரிப் படிப்பையும் சென்னையில் நிறைவு செய்த சுவாமிகள், நிழற் படக்கலை, அச்சக்கலை ஆகியவற்றை மேலை நாடுகள் சென்று, பயிற்சி பெற்றார். அந்த அனுபவத்தைக் கலாசேட்திராவின் வளத்திற்கும், வளர்ச்சிக்கும் பயன்படுத்தினார். கலாசேட்திரா அமைப்பை 1936-ம் ஆண்டு உருவாக்கி, கலை உலகிற்கு அளப்பரிய தொண்டாற்றி, உலகளாவிய உயர் பெருமை பெற்ற அன்னை ருக்மணி அருண்டேலின் அணுக்க அலுவலராக (Personal Assistant) 1944-ல் கலாசேட்திராவில் இணைந்த அருட்திரு நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள், (அப்போது சி. நாச்சியப்பன்) நாட்டியக் கலைக் குழுவின் மேலாளராக உலகத்தின் பெரும்பான்மையான நாடுகளுக்குப் பயணித்து, கலாசேட்திராவின் புகழ்க் கொடியை ஒளி வீசிப் பறக்கச் செய்த உன்னதக் கலைஞராவார்!

கலாசேட்திரா மாணவராக, பணியாளராக, கலைஞராக, அச்சக உரிமையாளராக, அன்னை ருக்மணி அருண்டேல் அறக்கட்டளைச் செயலாளராக அறுபது ஆண்டுகள் கலாசேட்திராவில் தொடர்பு கொண்டிருந்த சுவாமிகள். தமது எழுபத்திரண்டாம் வயதில் (1995) காவி உடுத்திப் துறவு பூண்டு கோவிலூர் ஆதினகர்த்தராக எழுந்தருளியபோது, இருபது ஆண்டுகளுக்கு முன்னர் காஞ்சி மகாசுவாமிகள் பெரிய பெரியவர் மொழிந்த அருட் சொற்கள் சுவாமிகளின் நினைவில் பிரசன்னமாகி நெகிழ்ச்சியூட்டி மகிழ்ச்சியளித்துச் சிலிர்க்கச் செய்தனவாம்! ஆன்மீகச் செல்வர் டி.எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள் 1975-ம் ஆண்டு, காஞ்சி மகாசுவாமிகளிடம் நாச்சியப்பனை அறிமுகப்படுத்தியபோது, "நகரத்தாரில்லையோ? கோவிலூர் மடத்தோட சம்பந்தம் வெச்சுக்கோ!" என்றாராம் காஞ்சி பெரிய பெரியவர்! மறைச் சொற்கள் அல்லவா? குறை சிறிதுமின்றி நிறைவேறிவிட்டது!

பல்லாயிரம் ஆண்டுகளாக தழைத்துச் செழித்து வேரூன்றிய திருக்கோயில் கலாசாரம், நாளும் நலிவடைந்து வருவதை, அடியார்களிடம் அன்போடும் ஆர்வத்தோடும் எடுத்துரைக்கும் கோவிலூர் ஆதீனகர்த்தர் தவத்திரு நாச்சியப்ப சுவாமிகள், மீண்டும் அந்தக் கலாசாரங்கள் புத்துயிர்

பெற்றுப் பொலிவடைய வெறும் வேண்டுகோள் விடுத்து நின்று விடாமல், உரிய முறையில் அரிய பயிற்சிக் களங்களை அமைத்து, பயில்விக்கும் கல்லூரிகளை உருவாக்கி, அவைகளை இணைத்து நிகர்நிலைப் பல்கலைக் கழகமாக (Deemed University) வடிவமைக்க, வாழ்வின், நேரங்களை அர்ப்பணித்து வருவது தொழத் தக்கது; தொழுது போற்றத்தக்கது.

வேதாகமப் பாடசாலை, திருமுறைக் கல்லூரி, நாதசுர, தவில் இசைக் கல்லூரி, சிற்பக் கல்லூரி, தேர்வாகனக் கல்லூரி, திரு ஆபரணக் கல்லூரி, ஆலய அலங்காரக் கலைப் பொருள் கல்லூரி எனத் திருக்கோயில் கலாசாரம் ஓங்கவும், உயரவுமான பயில்விப்பும் பயிற்சியும் கொண்ட அமைப்புகளை உருவாக்கியுள்ளார். சுவாமிகள் இந்தியப் பண்பாட்டு ஆய்வு நிறுவனம் (Indian Institute of Indology) ஒன்றை நிறுவி, நாடு தழுவிய பண்பாடுகளை, மரபுகளை, நம்பிக்கைகளை ஆய்வு செய்யவும் அவை சம்பந்தமான நூல்களை வெளியிடவும், அறிஞர்களை ஊக்குவிக்கவுமான ஆக்கமிகு செயற்கரிய செயல்கள் கொண்ட அபூர்வ நோக்கங்களை அதன் குறிக்கோள்களாக வடிவப்படுத்தியுள்ளார்கள். இத்தகைய போற்றத் தக்க செயல்களுக்கு மாதந்தோறும் செலவு செய்யும் வகையில், ஓர் அறக்கட்டளை உருவாக்கி, ஒரு பெருந்தொகையை, வைப்பு நிதியாக வைத்து, வருகின்ற தலைமுறைகளும் நன்றிப் பெருக்குடன் வாழ்த்த வழிவகை செய்துள்ளார்கள்.

தமிழின் சங்க இலக்கியங்களை எல்லாம், எழுதப் படிக்கத் தெரிந்த எவரும் புரிந்து கொள்ளுமாறு எளிய உரைகளுடன் அரிய பதிப்புகளாக உருவாக்கும் சுவாமிகளின் அற்புத முயற்சியில், அறிஞர் தமிழண்ணல் தொல்காப்பியத்திற்கு உரை எழுதிக் கொண்டுள்ளார். அண்மையில், டாக்டர் சுப. அண்ணாமலை உரையுடன் கோவிலூர் ஆதீனகர்த்தர் பதிப்பித்து வெளியிட்ட 'திருமந்திரம்' கண்ணில் ஒற்றிக் கொள்ளலாம்! அத்தகையதொரு நூலமைப்பு! அச்சுக்கலை வல்லுநரல்லவா சுவாமிகள்! பின்னே நூலமைப்பைப் பற்றிச் சொல்லவா வேண்டும்!

கல்வித் திறமும், கலை உரமும் கொண்ட கோவிலூர் திருமடாலயத்தில், நமது கலாசாரச் சிறப்பை உணர்த்த ஒரு புதிய பல்கலைக் கழகத் திருத்தேர் பொலிவோடு புறப்பட்டு விட்டது! சேர வாரும் செகத்தீரே! இணைந்து இழுத்துச் செல்வோம்! நினைந்து பெருமிதம் கொள்வோம்!

*(நன்றி : தினமணி கதிர்)*

